ஸம்ஸ்க்ருதஸ்ரீ:

# ॥ संस्कृतश्रीः ॥

संस्कृतविद्यासमिति पत्रिका

**SAMSKṚTAŚRI**

ஸம்ஸ்க்ருதஸ்ரீ



A Fortnightly Bulletin of the Samskrit Education Society, Madras.

Annual Subscription Rs. 8-00

Single Copy 0-40 Ps.

Life Subscription Rs. 100-00




9, Single Mall Street, Tiruchirapalli-620 002.

माला—4 पुष्पम्—5

वाग्देव्यै नमः

आसीना कमले करे जपवटीं पद्मद्वयं पुस्तकं
बिभ्राणा तरुणेन्दुकम्रमकुटा मुक्तेन्दुकुन्दप्रभा ।
फालोन्मीलितलोचना कुचभरक्रान्ता भवद्भूतये
भूयाद्वागधिदेवता मुनिगणेनासेव्यमानाऽनिशम् ॥

"अहिंसा सत्यमस्तेयं यावदर्थपरिग्रहः ।
ब्रह्मचर्यं तपः शौचं स्वाध्यायः पुरुषार्चनम् ॥"

(அஹிம்ஸை, உண்மை, திருடாமை, பிறருடைய பொருளுதவியை தேவையான அளவுக்குமட்டும் ஏற்றல், பிரம்மசர்யம், தவம், சுத்தம், வேதமோதல், பகவானைப் பூஜித்தல் ஆகியவற்றை மேற்கொள்ளல் மனம் தெளிவடைய வழி வகுக்கும்.) (பாகவதம்–கபில–தேவஹூதி ஸம்வாதம்)



१

श्रीगुरुभ्यो नमः

# ॥ संस्कृतश्रीः ॥

कलि 5082-रौद्र-वृश्चिक-7 (4-5) 22—12—80

बालिशेन मया प्रोक्तमपि वात्सल्यशालिनोः।
आनन्दमादिदंपत्योरिमा वर्धन्तु वां गिरः॥

—श्रीशङ्करभगवत्पादकृतत्रिपुरसुन्दरीवेदपादस्तुतितः

## चरैव चरैव

ऋग्वेदे ऐतरेयं नाम ब्राह्मणमारण्यकं च विद्येते। इतरा नाम काचिदृषिपत्नी। बहुपत्नीकः स ऋषिः। उत्तानपादः सुनीतिमिव, ऋषिरयं इतरां न बहु मेने। तस्याः पुत्रो महिदासो नाम, यं स ऋषिर्नाङ्के चकार, इतरासां पुत्रान् प्रेम्णा संसृजन्नपि। प्रियराहित्येन तस्या नामापि स विसस्मार, येन तां "इतरां" व्याजहारेव। क्षुब्धा इतरा भुवं देवीं आरिराध। भूर्देवी सभायां प्रसन्ना महिसुतं दिव्ये आसने उपवेश्य, तन्मुखेन ऋग्वेदीयं ब्राह्मणमाविश्चकार। कश्चन अरण्यवासी ऋषिरन्यो महिदासमनुजग्राह येन ऋग्वेदीयमारण्यकं तत्स्मृतिगोचरं बभूव। इतरापुत्रगृहीतत्वात् ऐतरेयत्वेन तयोरभिज्ञानम्। शुनःशेपोपाख्यानं वैदिककथानकेषु मूर्धन्यमत्रैव जागर्ति ऐतरेयब्राह्मणे। यत्रेदं सूक्तं सार्वदिकहितावहं "चरैव चरैव" इति उपदिशत् राजते। कथानकमेतदतिमनोहरम्।

हरिश्चन्द्रो नाम राजर्षिः ऐक्ष्वाकः, राज्ञो वेधसः पुत्रः। तस्य शतं जाया बभूवुः। तासु पुत्रं न लेभे। तस्य गृहे पर्वतनारदावृषी ऊषतुः। स नारदं पप्रच्छ।

यं त्विमं पुत्रमिच्छन्ति ये विजानन्ति ये च न।
किंस्वित्पुत्रेण विन्दते तन्म आचक्ष्व नारद ॥

"विवेकिनो नरा अविवेकिनः पश्वादयश्च पुत्रमिच्छन्ति। पुत्रेण किं नाम फलं पिता लभते? तद्वद" इति पृष्टो नारदः प्रत्युवाच। "उत्पन्नं सुखेन जीवन्तं पुत्रं पश्यन् पिता, स्वकीयं ऋणं पुत्रे सन्नयति। तेन कर्तव्यमनुष्ठेयं संपाद्यमन्यदन्यच्च तस्याशक्तौ पुत्रेण निर्वर्तयिष्यते इति आश्वसिति। पुत्रे वैदिकं लौकिकं च भरं समर्प्य, स्वधर्मसन्तानस्यानन्त्यं पश्यन् निर्वृतिं लभते। पृथिव्यामप्स्वग्नौ च यावन्तो भोगाः, ततोऽधिको भोगः पुत्रेण भोग्येन। पुत्रो हि नौरिव तमस्तारयति ऐहिकमामुष्मिकम्। पुत्रे हि पितुः प्रतीतिः स स्वस्मादन्यो नेति। अहमेव जायां प्रविश्य बहिरागतः शिशुतयेति स मोदते। अत एव पशवः पक्षिणोऽपि पुत्रलाभे प्रयतन्ते क्वचिदपचरन्तोऽपि"। इति। नारदः पुत्रार्थिनं हरिश्चन्द्रं वरुणमाराधयितुं प्रैरयत्। राजा वरुणमुपससार पुत्रार्थी "पुत्रो मे जायतां, तेन त्वा यजै" इति। विचित्रेयं प्रार्थना। उत्पन्नं पुत्रं पशूकृत्य यागकरणं प्रतिजानता किमर्थं पुत्रः प्रार्थ्यते? किं वा पुत्रेण जातेन, यो जात एव मारयिष्यते? किमनया विचिकित्सया? कथामनुसरामः। वरुणस्तां प्रार्थनामंगीचकार। पुत्रो जातः।

पुत्रं न वरुणाय दित्सति राजा। वरुण उपसरति राजानं, देये निर्बध्नाति। वरुणो जानीते, न कोऽपि त्यजति लब्धमिति। तत्रापीयता राज्ञा न ज्ञातं इदन्तया पुत्रसुखम्। तदिदानीमनुभवगोचरम्। उत्पन्नं पुत्रं पश्यतस्तस्य कः कोऽपि भावोन्मेषो हृदि उज्जृंभते। धन्यमात्मानं मन्यते स तदंगरजसा मलिनः। उपसर्पन्तं वरुणं अतिसन्दधातीव। "देव! सत्यं प्रतिश्रुतं मया, जातेन पुत्रेण त्वां यजै इति। तथापि जातस्य न दशाहोऽतीतः। अयं सूतिकागृहवासी अशुद्धः। अतो भवदर्पणं नार्हति। दशाहेऽतीते पुण्याहशुद्धिकर्मणि प्रचलिते ..... .....।" तथास्त्विति वदन् वरुणोऽन्तर्धत्ते।

वरुणो हन्त ! दिनानि गणयति, द्वादशे रोहित इति नाम दत्तं इति जानन् राजानमुपसृत्य निर्बध्नाति । राजा हेत्वन्तरं लभते कालयापने । अदशनः पशुर्न यागार्हः । "यदा पशोर्दन्ता जायन्ते .... " । वरुणोऽन्तर्धत्ते ।

पशोर्दन्ता जाताः । पतनशीलास्ते । अतः तेऽस्थायिनः । पतन्तु .... । ततः पतिता दन्ताः पुनरुत्पद्यन्तां .... । क्षत्रियो नु ! जात्युचितास्त्रशस्त्रधरणयोग्यो भवतु .... । एवं कालमतिवाहितवान् राजा कदाचित्पुत्रमाजुहाव—"तत ! अयं वरुणस्त्वां मह्यमददात् । यथाप्रतिश्रुतं वरुणं त्वया यजे" इत्युवाच । स ह नेत्युक्त्वा धनुरादायारण्यं जगाम । संवत्सरं अरण्ये स चचार ।

वरुणो राजानं अप्रतिश्रुतकारिणं उदरे जग्राह । तस्योदररोगोऽजनि । तद्वृत्तं रोहितोऽशृणोत् । पितरं उच्छूनोदरं मुमूर्षुं द्रष्टुं अरण्यात्प्रतिनिववृते । मध्ये इन्द्रस्तं परीयाय । पुरुषरूपो जगाद च "वत्स—

नानाश्रान्ताय श्रीरस्तीति रोहित शुश्रुम ।
पापो नृषद्वरो जनः इन्द्र इच्चरतः सखा ॥
चरैव चरैव ।

यः किल न श्राम्यति, न पर्यटति, एकत्रैव अलसो निवसति, तं बहुविधा श्रीः न श्रयते । किं न श्रुतं तथा त्वया ? सर्वत्र नीतिकुशलाः पुरुषास्तथा नु भाषन्ते ? वयं तथा शुश्रुम । नरो विद्यादिभिः श्रेष्ठोऽपि बन्धुमध्ये आसीनः एकाकी बहिर्गन्तुमपि यो बिभेति, न वा गच्छत्यलसतया, स्वजनपरिवृतिं सदा कांक्षते, स पापीयान् स्वजनैरप्यवमतः तुच्छो भवति । अतस्तव पितृगृहे वासो न युक्तः । अरण्येऽन्यत्र वा चरतः को मे सहाय इति मा विषीद । इन्द्रो भगवानेव तव सर्वत्र

चरतः सखा सहायो भविता। मा विशंकस्व। चरैव चरैव" इति।

स्वगृहे आत्मनो वरुणपशुतां विचिन्त्य भीतस्य इन्द्रस्योपदेशो मनसि लग्नः सम्यक्। पुनर्वत्सरमेकं परिबभ्राम। श्रान्तो गृहं प्रति निववृते द्वितीयवत्सरान्ते। इन्द्रः पुनः तमुपैत्। जगाद च "वत्स—

पुष्पिण्यौ चरतो जंघे भूष्णुरात्मा फलग्रहिः।
शेरेऽस्य सर्वे पाप्मानः श्रमेण प्रपथे हताः॥
चरैव चरैव

पुष्पयुक्तमिमं वृक्षं पश्य! स वर्धते। फलानि काले गृह्णाति। लोकेन आदरतः सेव्यो भवति। एवमेव पर्यटतो नरस्य जंघे श्रमं जयतः। स नरो वर्धिष्णुः, स्थिरतया भूष्णुः आरोग्यं फलतया गृह्णन् सर्वैरुपजीव्यते। तथा चरतः, प्रपथे तत्कृतानि पापानि क्षीयन्ते, हताः प्रकृष्टतीर्थनिषेवणेन, क्षेत्रोत्तमेषु सदा सन्निहितानां देवतानां दर्शनेन च। क्रमेण पापानि अपहतवीर्याणि शेरते मृतकल्पानि, न फलं ददति। यथा शयानः पुरुषः स्वकृत्येषु नावदधाति, न वा कृत्यं निर्वोढुं पारयति एवं पापानि निष्फलानि भवन्ति। त्वमपि गृहं मा गच्छ! न वाऽलसस्तत्र शयीथाः। अतो भूयश्चर, चर सर्वत्र। न पितुर्गृहेऽवतिष्ठस्व!" इति।

रोहितो जंघे स्वीये परिममर्श। ते दृढे क्लेशसहेऽन्वभवत्। धृतिमालंब्य पुनर्वत्सरमेकं चचार। (अनुवर्ति)

## வாசகர்களுக்கு!

7—1—1981, 'ஸம்ஸ்க்ருதஸ்ரீ' மலர் அதிகமான பக்கங்களுடன், விசேஷ ஆண்டு மலராக வெளியிடப்படும். நான்காம் ஆண்டு சந்தா செலுத்தியவர்க்கே இது அனுப்பப்படும். இதுவரை சந்தா செலுத்தாதவர்கள் உடன் அனுப்பவும்.

—ஆசிரியர்.

# உலகத் தமிழ் மஹாநாடு

**A. குப்புஸ்வாமி**

மானிடன் முதல் எறும்பு முடிய உயிர்வாழ் இனங்கள் அனைவற்றிற்கும் ஒரு மொழியுண்டு என்பதுதான் உயிரியல் ஆராய்ச்சி நிபுணர்களின் கருத்து. மனதில் ஏற்படும் எண்ணங்களை வெளிப்படுத்த உதவுவதே மொழி என்ற பொதுவான கருத்து நிலவிடினும், பொது வாழ்க்கைக்கப்பாற்பட்ட மேன்மையான கருத்துகளையும், சிந்தனையைத் தூண்டும் விஷயங்களையும் இலக்கிய வடிவில் தாங்கி நிற்கும் மொழிகளே உலகில் மேம்பாடடைந்த மொழிகளாகப் போற்றப்படுகின்றன எனச் செப்பின் மிகையாகாது.

கூர்ந்து ஆராய்ந்தால், மிகப் பழங்காலந்தொட்டு உலகில் மேன்மையுடன் விளங்கும் மொழிகள் ஸம்ஸ்க்ருதமும், தமிழுமாகும். ஐரோப்பிய நாடுகளில் மேம்பாடடைந்த மொழிகளுள் பண்டை லதீனும், கிரேக்கமும் குறிப்பிடத்தக்கவை. ஸம்ஸ்க்ருதம் பல கீழ்த்திசை மொழிகளுக்கும், ஐரோப்பிய மொழிகளுக்கும் தாய் என்பது மொழி ஆராய்ச்சியாளரின் துணிபு. நம் பாரத நாட்டைப் பொருத்தவரையில் அநேகமாக பேசப்படும் மொழிகள் எல்லாவற்றிலும் ஸம்ஸ்க்ருதச் சொற்கள் குறைந்த விகிதத்திலோ, அதிகமான விகிதத்திலோ கலந்துள்ளது என்பதை மறுக்கமுடியாது. ஸம்ஸ்க்ருதமும், தமிழும் நம்நாட்டின் இரு பார்வைகள் போன்று முக்யத்வம் பெற்றவை என்று கூறிடின் மிகையாகாது. திருஞான ஸம்பந்தர் முதல் பல தமிழ் முனிவர்களும், பிற்காலத்தியத் தமிழ் அறிஞர்களும் இவ்விரு மொழிகளின் மேன்மையை இவ்வழியில் தான் விவரித்துள்ளனர். தொல்காப்பியத்தின் சில சூத்திரங்களில் கூட இவ்விரண்டு மொழிகளுக்கிடையேயுள்ள தொடர்பு விவரிக்கப்பட்டுள்ளது. இரு மொழிகளிலுமுள்ள பல புகழடைந்த நூல்களில் ஒரேவிதமான கருத்துக்கள் விவரிக்கப்பட்டுள்ளதற்கு எண்ணற்ற சான்றுகள் உள.

தமிழ் நம் தென்னகத்தின் தாய்மொழி. ஸம்ஸ்க்ருதம் எல்லா மொழிகளிலும் ஊடுருவி நிற்கும் ஜீவநாடி. ஒரு மொழியில் அதிலும் நாம் பேசும் தாய்மொழியில் பற்றுக்கொள்வது இயல்பு. ஆயினும் தாய்மொழியில் பற்று என்றால் பிற மொழிகளை வெறுப்பதோ இகழ்ந்து கூறுவதோ சரியல்ல. மொழிப்பற்று வேறு, மொழிப் பித்து அல்லது வெறி என்பது வேறு. முன்னது விரும்பத் தக்கது, பின்னது வெறுக்கத்தக்கது. 'மொழி பல கல்' என்பது மூதுரை.

ஒவ்வொரு சிறந்த மொழியின் உலக மஹாநாடு நடத்துவது மேலான குறிக்கோளுடையதாகும். உலகின் பல பகுதிகளில் ஒரு

மொழியைப் பேசுபவர்களும், கற்பவர்களும், அதன் இலக்கியச் சிற்பிகளும், அம்மொழி கவிஞர்களும், பேச்சாளர்களும் சிந்தனை யாளர்களும் ஓரிடத்தில் ஒன்றுகூடி தத்தம் கருத்துகளைப் பரிமாறிக் கொள்ளவும், அம்மொழியின் மேம்பாடுகளை யாவரும் அறிந்து கொள்ளவும், அம்மொழியின் சிறந்த இலக்கியக் கருத்துக்களை உலகில் பரவச்செய்யவும் இம்மஹாநாடுகள் பயன்படும்.

உலக ஸம்ஸ்க்ருத மஹாநாடுகள் நம்நாட்டிலும், பிரான்ஸ் நாட்டிலும், பர்லினிலும் முன்னர் நடந்துள்ளன. உலகத் தமிழ் மஹாநாடுகள் இதற்கு முன்பு நம்நாட்டில் நடந்ததும் யாவரும் அறிந்ததே.

தமிழ் மொழியின் பண்டைக் கேந்திரமான மதுரைமாநகரில் 1981–ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் உலகத் தமிழ் மாநாடு நடைபெறுவதுபற்றி எல்லாத் தமிழ்நாட்டு பிரஜைகளும் மகிழ்ச்சி அடைவர் என்பது திண்ணம். தமிழக அரசு இம்மஹாநாட்டிற் கான எல்லா ஏற்பாடுகளையும் செய்துவருவது பாராட்டுக்குரியது.

இம்மஹாநாட்டிற்குப் பிறமொழி அறிஞர்களையும் அழைத்துப் பிறமொழிகளுக்கும், தமிழுக்குமிடையேயுள்ள தொடர்பையும், சிறந்த பிறமொழி இலக்கியங்களுக்கும் சிறந்த தமிழ் இலக்கியங் களுக்குமிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளையும் ஆராய் வதும் மஹாநாட்டின் நிகழ்ச்சிகளில் இடம்பெறுமாயின் அது ஒரு நல்ல முயற்சியாகும். மேலும் மஹாநாட்டின் அமைப்பாளர்கள் தமிழில் கிடைக்கப்பெறாத ஸம்ஸ்க்ருதம் போன்ற பண்டை மொழி களில் புதைந்துகிடக்கும் சில இலக்கியங்களைத் தமிழாக்கம் செய்யவும், அதேபோல் தமிழ் இலக்கியச் செல்வங்களில் காணப்படும் சிறந்த கருத்துக்களைக்கொண்ட பண்டை நூல்கள் சிலவற்றை யேனும், உலக மொழிகளில், முக்கியமாக ஆங்கிலம், பிரெஞ்சு, ஸம்ஸ்க்ருதம் போன்ற மொழிகளிலும், பிற முக்கிய இந்திய மொழி களிலும் மொழிப்பெயர்ச்சி செய்து பிரசுரிக்க ஏற்பாடு செய்வார்க ளாயின் அது தமிழுக்கு இம்மஹாநாடு செய்யும் பெரும் தொண்டாகும்.

நாட்டின் ஐக்யத்தை வளர்க்கவும், பல மொழிகளிடையே ஒற்றுமை காணவும், தமிழ் மொழியிலுள்ள சிறந்த பண்டை நூல் களிலும், நவீன நூல்களிலும் புதைந்து கிடக்கும் உயரிய பண்புகளை மக்களிடையே பரப்பவும், அதற்கான முறைகளைக் கையாளவும் மதுரை உலகத் தமிழ் மஹாநாடு முயலுமாயின் அதுவே அது தமிழ் தாய்மொழிக்குச் செய்யும் சிறந்த நன்நோக்கம்கொண்ட பணியும் தொண்டுமாகும்.

வாழ்க தமிழ்! வளர்க தமிழகம்!! வாழ்க பாரதநாடு!!!

## வரப்பெற்றோம்

### 1. "ஸ்தோத்ரரத்னபஞ்சகம்"

*பிரசுரிப்பாளர்:* அம்ருதவாணி ப்ரசாரிணி ஸபா.
கோர்காவன், பம்பாய்-400 062.

48 பக்கங்கள்—விலை ரூ. 2-40

இச்சிறு புத்தகத்தில், ஸங்கட நாசன கணேச ஸ்தோத்ரம், மஹாலக்ஷ்ம்யஷ்டகம், லலிதாபரமேச்வரீ அக்ஷரமாலா, சிவமானஸ பூஜா, த்வாதசஜ்யோதிர்லிங்க ஸ்தோத்ரம், விஷ்ணு ஷோடசநாம ஸ்தோத்ரம், ஸ்ரீ குருவாதபுராதீசாஷ்டோத்தர சதநாம ஸ்தோத்ரம், ஸூர்ய நமஸ்கார மந்திரங்கள் அடங்கியுள்ளன. நல்ல முறையில் ஸம்ஸ்க்ருதத்தில் ச்லோகங்களும், ஆங்கிலத்தில் பொருளுடன் அச்சிடப்பட்டுள்ளன. யாவரும் பயனடையக்கூடியது.

### உ. "பாலபோதினீ கீதா"

*பிரசுரிப்பாளர்:* அம்ருதவாணி ப்ரசாரிணி ஸபா,
கோர்காவன், பம்பாய்-400 062.

26 பக்கங்கள்—விலை ரூ. 1-60.

இச்சிறு நூலில் பகவத் கீதை, வால்மீக ராமாயணம் ஆகியவற்றிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட சுமார் 50 சுலோகங்களும், 15 ஸுபாஷிதச் செய்யுள்களும் இடம்பெற்றுள்ளன. ஆங்கில அனுவாதத்துடன் செவ்வனே பிரசுரிக்கப்பட்ட இது முக்கியமாக ஸம்ஸ்க்ருதமும் ஆங்கிலமும் பயின்றுள்ள சிறுவர்களுக்குப் பயன்படும்.

---

## ஸம்ஸ்க்ருதஸ்ரீ—ஆண்டு பரீக்ஷை

ஸம்ஸ்க்ருதஸ்ரீ மூலம் நடத்தப்பெறும் பாடபோதனைக்கான ஆண்டு பரீக்ஷை ஜனவரி 81 இரண்டாம் வாரம் நடக்கவிருக்கிறது. தேதி 7-1-81 ல் வெளியாகும் ஸம்ஸ்க்ருதஸ்ரீயில் வெளியாகும். பரீக்ஷை தபால்மூலம் நடக்கிறது. அவரவர்கள் வீட்டிலிருந்தே அனுப்பப்பெறும் வினாத்தாள்களுக்கு விடை எழுதி அனுப்பலாம்.

இதுவரை ஸம்ஸ்க்ருதஸ்ரீ பரீக்ஷைகளில் கலந்துகொள்ளாதவர்கள் 1-30 பாடங்களில் மட்டுமோ, 1-60 பாடங்களில் மட்டுமோ, 1-90 பாடங்கள் முழுவதிலுமோ பரீக்ஷை கொடுக்கலாம். 1-30 பாடப் பகுதிகளில் முன் நடந்த பரீக்ஷைகளில் தேர்ந்தவர் 31-60 பாடங்களில் மட்டுமோ, 31-90 பாடங்களிலோ பரீக்ஷை கொடுக்கலாம். முன் நடந்த பரீக்ஷைகளில் 1-60 பாடங்களில் தேர்வு பெற்றவர் 61-90 பாடப் பகுதிகளில் இப்போது பரீக்ஷை கொடுக்கலாம் இதற்கான விண்ணப்பத்தாளை 31—12—1980க்குள் ஸம்ஸ்க்ருதஸ்ரீ காரியாலயத்திற்கு அனுப்பவேண்டும். விண்ணப்பத்தாளில் தமது பெயர், விலாஸம், ஸம்ஸ்க்ருதஸ்ரீ சந்தா எண், தபால் பாட வரிசை எண், இவைகளைத் தெளிவாகக் குறிப்பிடவும். 0-35 பைசா தபால்தலை ஒட்டிய கவரில் தமது விலாஸம் எழுதி, இத்துடன் இணைக்கவும். தான் கலந்துகொள்ளவிருக்கும் பரீக்ஷை விபரத்தை 1, 1-2, 1-2-3, 2-3, 3 ஆண்டு பரீக்ஷை எனத் தெளிவாகத்தரவும். பரீக்ஷைபற்றிய மற்ற விபரங்களை அடுத்த இதழில் காணலாம்.

சிதம்பரம் கீழவீதி (நெ. 55) பிரதிபாவில், ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய ஸமிதியின் ஆதரவில், எட்டாவது அத்வைத ஸதஸ் 13—12—80 முதல் 18—12—80 முடிய ஆறுதினங்கள் பல சிறந்த வித்வான்களுடைய உபன்யாஸங்களுடன் சிறப்பாக நடந்தேறியது.

☼ ☼ ☼ ☼

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் குஜராத் மாகாணத்திலுள்ள ஜோதிர்லிங்கக்ஷேத்திரமான ஸோமநாதத்திற்கு விஜயம் செய்து, ஆங்கு, குஜராத்திய வேத வித்வான்களுக்கு விசேஷ ஸன்மானம் செய்து, போர்பந்தர் நகரம் வழியாக யாத்திரைசெய்து, 14—12—80தினம் துவாரகை க்ஷேத்திரத்தை அடைந்தார்கள்.

☼ ☼ ☼ ☼

ஸ்ரீ வெங்கடேச்வர பஞ்ச ரத்னமாலா—இந்த வரிசையில் நான்காவது இசைத்தட்டு—ஸ்ரீமதி M.S. ஸுப்பலக்ஷ்மி அவர்கள் பாடிய வெங்கடேச்வரகராவலம்ப ஸ்தோத்திரம் (சிருங்கேரி ஸ்ரீ நிருஸிம்ஹபாரதீஸ்வாமிகள்) கனகதாரா ஸ்தோத்திரம் (ஆதிசங்கரர்) லக்ஷ்மி அஷ்டோத்தரம், துர்க்கா பஞ்சரத்னம், (காஞ்சீ ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்) கோவிந்தாஷ்டகம் (ஆதிசங்கரர்) ஸ்ரீரங்க கத்யம் (ஸ்ரீ ராமானுஜர்) தசாவதாரம் (ஸ்ரீமத்வர்) சிக்ஷாஷ்டகம் (சைதன்ய மகாபிரபு) என்ற எட்டு ஸம்ஸ்க்ருதத் துதிப்பாடல்கள் அமைந்தது ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமிகளால் ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி அன்று வெளியிடப்பெற்றது. அன்றே நாட்டின் வேறு 10 இடங்களில் ஸன்யாஸி மஹான்கள் இதனை வெளியிட்டுள்ளார்கள். சிறந்த ஆசாரிய புருஷர்களின் திவ்ய ஸ்ரீஸூக்திகளைப் பக்தி ததும்ப பாவங்கள் ததும்பும் இனிய குரலில் பாடியிருப்பது அடியார்களின் மனத்தை எளிதில் இறைவனடிகளில் பதியும்படி செய்கிறது. மிக அரிய ஸேவை.

☼ ☼ ☼ ☼

12—12—80 மாலை தேசீயக் கல்லூரி மேல்நிலைப்பள்ளியில் நடந்த கூட்டத்தில் சென்னை அமரபாரதீ பரீக்ஷா ஸமிதியின் ஸெப்டம்பர் மாதத்திய ப்ராரம்ப பரீக்ஷையில் தேறிய மாணவ மாணவியருக்கு வெள்ளிப் பதக்கங்களும், சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

---

வேதவித்பன்னரும், வேதபாராயணம், சாஸ்திரப் பயிற்சி, ஸம்ஸ்க்ருதப் பிரசாரம் இவைகளுக்கு அதிகமான பொருளுதவி செய்துவந்தவருமான திருச்சி நகர் பிரமுகர் **ஸ்ரீ P. R. கிருஷ்ணய்யர்** அவர்கள் சென்ற 3—12—1980 இரவு காலமானது அறிந்து, ஸம்ஸ்க்ருதஸ்ரீ நிர்வாகம் துயரமுற்று அவருடைய குடும்பத்தாருக்கு ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்கிறது.

அவருடைய அந்தக் கண்களுடைய அருள் சிறிது பெற்றமையால் எல்லாச் செல்வங்களையும் எல்லோரும் பெறுகிறார்கள். எனினும் தன் திருப்திக்கென தனது உறவினரின் (கதிரவனின்) எழுச்சியை எதிர்பார்க்கும் தாமரை எப்படி இவரது கண்ணிற்கு ஈடாகும்? 56

चतुरश्चतुरब्धिमध्यभूमेर्धवलं छत्रमिदं धरिष्यतीति ।
अदसीयशिरः पुरैव जानन् वितनोति स्म तदाकृति प्रजेशः ॥

சாமர்த்தியமுள்ள பிரும்மா நான்கு கடல்களின் இடையேயுள்ள பூமியின் வெண்கொடையை அந்த அரசரின் தலை தாங்கப் போகிறதென்று அறிந்து கொண்டவராக முன்னமேயே அதற்கேற்றபடி அவரது தலை வடிவை அமைத்தார். 57

भुवनं निखिलं भुजेन भूपे निजलीलावलयोपमं दधाने ।
कलशीजलधौ सुखेन शेषं शयनं शार्ङ्गधरस्तदाधिशिश्ये ।

அரசன் உலகம் முழுவதையும் தனது விளையாட்டிற்காகத் தரித்து உள்ள கங்கணவளயம் போல் கையால் தாங்கி நிற்கும்போது, ஆழ் கடலில் சார்ங்கமெனும் வில்லேந்திய நாராயணன் ஸுகமாக ஆதி சேஷனாகிய படுக்கையில் ஏறிப்படுத்துவிட்டார். 58

अतिदुर्ललितस्वशौर्यमत्तद्विरदालानममुष्य बाहुदण्डम् ।
प्रतिपक्षनृपक्षितिप्रवेशप्रतिबन्धप्रबलार्गलं विशंके ॥

மிகவும் பொல்லாதவர்களும் தன் சூரத்தன்மையால் திமிர் கொண்டிருப்பவர்களுமாகிற யானைகளைக் கட்டும் முளையாகவும் எதிரி அரசர்கள் தன் ஆளுகைக்குட்பட்ட பூமியில் நுழைவதைத் தடுக்கும் தாப்பாள் போலவும் இவரது தடித்த கைகளைக் கருதுகிறேன். 59

युधि यूपवरो द्विषत्पशूनां विटपः कल्पकशाखिनः प्रदाने ।
विधुविश्रमसिद्धदण्ड उर्व्या उपधानोत्तम एतदीयबाहुः ॥

போரில் எதிரிகளாகிய (வேள்வியில் பலியாகவிருக்கும்) ஆடுகளுக்கு (அவைகளை வேள்விச்சாலையில் கட்டப்பயன்படுத்தப் பெறும்) கம்பமாகவும், வாரி வழங்குவதில் கல்பக மரத்தின் பெருங் கிளையாகவும், சந்திரன் களைப்பாறுவதற்காக ஆயத்தமாயிருக்கும் தாங்கும் கம்பமாகவும் பூமியைத் தாங்கும் தலையணையாகவும் இவரது கை விளங்கிற்று. 60

धरणीमवितुं धृतव्रतेऽस्मिन् क्षितिपे चोरयतीति शब्दयोगः।
अभवद्भुवने तदा सुभद्रापरिणीतेः कथनप्रसंग एव॥

அரசர் பூமியைக் காப்பதில் முழு ஈடுபாடு கொண்டவராக இருந்த போது 'திருடுகிறுன்' என்ற சொல் வழக்கு ஸுபத்ரா விவாஹத்தின் கதை சொல்லும் போது மட்டுமே அப்போது உலகில் ஏற்பட்டது. 61

न कुचो युवतौ परं विहारे रथचक्रं त्वनयो न जातु लोके।
अहयो न नरो रसातलेऽस्मिन्नवनीं शासति भूपतौ सुखेन॥

அந்த அரசர் நாட்டைச் சுகமாக ஆளும் போது குசம் (ஸ்தனங்கள்) யுவதியிடம் மட்டுமில்லை. காம விளையாட்டுகளிலும் குசம் (ஸங்கோசம்) இருந்தது. ரதசக்கரத்தில் மட்டும் ஆணிகள் (அநி-முளை ஆணி, அதன் பன்மை-அநய:) இருந்தன. மக்களிடம் அநயம் (நீதிக்குப்புறம்பான செயல்) இல்லை. மனிதன் அஹயனுக (அஹய:-குதிரை இல்லாதவன்) இல்லை. பாதாளத்தில் மட்டும் பாம்புகள் (அஹி-பாம்பு அஹய:-பன்மை) இருந்தன. (சொற் சிலேடை) 62

सुरुचिश्च सुनीतिरित्यभूतामनुरूपे महिलामणी महिष्यौ।
नृपतेः कमलेक्षणस्य विष्णोः कमलासागरमेखले इवास्य॥

அரசருக்கு ஏற்றவர்களாக ஸுருசி ஸுநீதி என்ற பெண்களுக்குள் சிறந்த இரு பட்டத்து ராணிகள் இருந்தனர். தாமரைக் கண்ணனை விஷ்ணுவிற்கு லக்ஷ்மீயும் பூதேவியும் போல். 63

सुतरां स्वसुखैकसक्तचित्ता सततं साधुसतीपथैकपान्था।
सुरुचिश्च तथा सुनीतिरेते शुशुभाते स्वसमाननामभाजौ॥

ஸுருசி முழுவதும் தன் சுகத்தில் மாத்திரம் ஈடுபாடு கொண்டவள். ஸுநீதி நல்ல பதிவிரதைகளின் வழியில் மட்டும் செல்பவள். இவர்கள் தத்தமது ஸ்வபாவத்திற்கேற்ற பெயர் கொண்டவர்களாக இருந்தார்கள். (ஸுருசி-நல்லருசி கொண்டவள். ஸுநீதி-நல்வழி கொண்டவள்.) 64

क्षमया क्षमया समां सुनीतिं स मनागप्यनवेक्ष्य दक्षिणोऽपि।
सुरुचौ सततं ससञ्ज रागात् क्षितिपः शार्ङ्गधरो यथा रमायाम्॥

மனைவிகளிடத்தில் கருத்து வேற்றுமை ஏற்படாத வண்ணம் பழகும் திறமையுள்ளவராயினும் அந்த அரசர் பொறுமையில் பூமிதேவிக்கொப்பான ஸுநீதியை சிறிதளவு கூடக் கவனிக்காமல் ஸுருசியிடத்திலேயே ஆசை காரணமாக அதிகம் ஒட்டிப்பழகினார், மஹாவிஷ்ணு லக்ஷ்மியிடத்தில் பழகுவது போல். 65

न च सा विधया कयापि हीना न तथाऽस्त तथाप्यसौ सुनीतौ।
सुरुचौ रमते यथा स मोदान्न हि तुल्येऽपि समा रुचिर्जनानाम् ॥

அவளும் எந்தவிதத்திலும் குறைவுள்ளவள் அல்ல. அப்படி இருந்தும் ஸுநீதியிடத்தில் அவர் அவ்வளவு பிரியத்துடன் பழகவில்லை. ஸுருசியிடத்தில் களிப்புடன் ஈடுபட்டார். மக்களுக்கு, ஒரே விதமானவற்றில் கூட ஸமமான ஈடுபாடு இருப்பதில்லை. 66

शिरसा वहते शिवो हि गंगामुरसा सागरसंभवामुपेन्द्रः।
सुरुचौ परमुत्सुकोऽयमास्ते विरलः स्त्रीषु हि पक्षपातहीनः॥

சிவன் தலையால் கங்கையைத் தாங்குகிறார் அல்லவா? விஷ்ணு மார்பால் கடல் மகளைத் தாங்குகிறார். ஸுருசியிடத்தில் இந்த அரசர் அதிகப்பிரியமுள்ளவராக இருக்கிறார். பெண்கள் விஷயத்தில் பக்ஷபாதமில்லாதவர் மிகச்சிலரே. 67

सुरुचौ सुरुचेर्भृशं स्वभर्तुश्चिखिदेऽनादरतस्सुनीतिरन्तः।
न सहेत हि मानिनी सपत्नीपरतां भर्तरि का कथा स्वभंगे॥

ஸுநீதி, ஸுருசியிடம் நல்ல ருசியுள்ள தன் கணவனின் ஆதரவின்மையால் மிகவும் மனத்தினுள் வேதனைப்பட்டாள். கணவன் (தன்னைவிட) சக்களத்தியிடம் அதிகம் ஈடுபட்டுள்ளதை ரோசமுள்ள பெண் தாங்கிக்கொள்ளமாட்டாள். தன்னையே அவமதிப்பதாயின் என்னவாகும்? 68

कथमप्यनयाऽन्वभावि दुःखं कमनानादरसंभवं सुनीत्या।
न हि दुस्सहमंबुजेक्षणानां निजभर्तुर्विमुखत्वतोऽन्यदस्ति॥

இந்த ஸுநீதியால் கணவனது ஆதரவின்மையால் ஏற்பட்ட துக்கம் எப்படியோ தாங்கிக் கொள்ளப்பட்டது. தன் கணவனின் பராமுகத்தை விட சகிக்கமுடியாத வேறொன்று பெண்களுக்கு இருக்காதல்லவா? 69

क्षमते स्म यथा यथा सुनीतिर्नृपतिर्हन्त तथा तथा विशेषात् ।
प्रवणस्सुरुच्यावुदास्त तस्यां शमवत्स्वेव हि वामता जनस्य ॥

ஸுநீதி எவ்வளவுக்கெவ்வளவு பொறுத்துக்கொள்கிறாளோ, அத்தனைக்கத்தனை தனிப்பட்டு ஸுருசியிடம் ஈடுபாடு கொண்டவராக அரசர் ஸுநீதியிடம் உதாஸீனமாயிருந்தார். பொறுமையுள்ளவர்களிடத்தில் தான் மக்கள் குரூரமாயிருப்பதும். 70

विषमेऽपि समे विनैव खेदं पतिमुत्तानपदं पतिव्रता सा ।
प्रतिबिंबवदन्ववर्तितैनं जगृहे जातु न तत्प्रतीपरीतिम् ॥

(தன் விஷயத்தில்) ஸமநோக்கில்லாதவராயினும், ஸமநோக்குள்ளவராயினும் தன் கணவரான உத்தான பாதரை அந்தப்பதிவிரதை மனக்கஷ்டமின்றி (பிம்பத்தை) பிரதி பிம்பம் போல் தொடர்ந்தாள். எந்த நிலையிலும் அவருக்கெதிரான முறையை ஏற்கவில்லை. 71

भृशमुग्रतरं कदापि नाथे तपति स्वे तनुमप्यसौ न खेदम् ।
अवहन्नितरां प्रसन्नफुल्लस्वमुखाब्जा किल पद्मिनी सुनीतिः ॥

ஸுநீதி மிக மிகக்கொடுமையாக எப்போதாயினும் தன் கணவர் தன் உடலுக்குத் தாபம் தந்தாலும் அவள் சிறிதும் வேதனையை அனுபவிக்கவில்லை. தாமரை (கதிரவன் எத்தனை தாபத்தைக் கொடுத்தாலும்) மலர்ந்த அழகிய தனது முகத்துடன் இருக்குமல்லவா ? 72

अपिपीडत यावदन्यमोहादयमुत्तानपदोऽवमत्य तावत् ।
गुणतो नितरां बभौ सुनीतिः पुटपाकान्न हि हीयते सुवर्णम् ।

மற்றவளிடத்திலுள்ள மோகத்தால் உத்தானபாதர் எவ்வளவுக்கெவ்வளவு துன்புறுத்தினரோ, அத்தனைக்கத்தனை குணத்தால் மிகச் சிறப்புடன் விளங்கினாள். தங்கம் புடமிட்டுக் காய்ச்சுவதால் தாழ்வடைவதில்லையே. 73

त्रिजगत्यपि वा सुनीतितुल्या न वधूः कापि पतिव्रतेति लोकैः ।
निखिलैः कथितं निशम्य तस्यामनसूयापि भृशं दधावसूयाम् ॥

மூவுலகிலும் ஸுநீதியைப் போன்ற பதிவிரதைப் பெண் எங்குமில்லையே என எல்லா மக்களும் கூறியதைக் கேட்டு அவளிடத்தில் (அஸூயை இல்லாத) அனஸூயையும் அஸூயையடைந்தாள். 74

नाथादन्यत्किमपि महितं नो सतीनामितीयं
छायेवामुं सकलविषयेऽप्यन्ववर्तिष्ट साध्वी ।
नैवामुष्याः सुखमगणयत्किञ्चिदुत्तानपादः
प्रायो वामा भवति नियतिः साधुशीलेषु लोके ॥

உ

श्रीगुरुभ्यो नमः

# ॥ संस्कृतश्रीः ॥

पाठमाला अनुबन्धः ७४ பாடமாலா தொடர் 74

## पञ्चनवतितमः पाठः—பாடம் 95

### समासाः ஸமாஸங்கள் (தொடர்ச்சி)

2, ஸமாஸம் அடைந்த பதங்களுக்கு **समस्तपदानि** ஸமஸ்த பதங்கள் (Compound word) என்று பெயர். ஸமஸ்த பதத்தின் பொருளை விளக்கும் சொற்றொடருக்கு **विग्रह वाक्यं** என்று பெயர்.

| विग्रह वाक्यं | ஏற்படும் மாறுதல் | समस्तपदं |
|---|---|---|
| सूर्यस्य + उदयः | सूर्य + उदयः | सूर्योदयः |
| इष्टं + अनतिक्रम्य | इष्टं + यथा | यथेष्टं |
| रामः + लक्ष्मणः च | राम + लक्ष्मण | रामलक्ष्मणौ |

3. ஸமாஸத்தில் குறைந்தது இரண்டு பதங்கள் சேரும் என்றோம். முதல் பதத்துக்கு **पूर्वपदं** என்றும், பின் பதத்துக்கு **उत्तरपदं** என்றும் பெயர். இப்பதங்களின் பொருள்கள் முக்கியத்துவம் பெறுவதைப் பொறுத்து ஸமாஸங்கள் **1 पूर्वपदार्थप्रधान समासः 2 उत्तरपदार्थप्रधानसमासः 3 उभय-पदार्थप्रधानसमासः 4 अन्यपदार्थप्रधानसमासः** என்று நான்கு வகைப்படும்.

4. ஸமாஸத்திலுள்ள இரண்டு பதங்களுக்குள் எந்தச் சொல்லின் பொருளுக்கு அடுத்த பதத்துடன் இணைவதற்கு மிகுதியான பொருத்தமுள்ளதோ அதுவே முக்கியமாகும். '**गोक्षीरं मधुरं**' என்ற வாக்கியத்தில் **गोक्षीरं** என்ற ஸமஸ்த பதத்திலுள்ள **क्षीरं** என்ற பதத்தின் பொருளுக்கு **मधुरं** என்ற சொல்லின் பொருளுடன் இணைவதற்கு அதிக உரிமை உள்ளது. "ராஜ குமாரன் வந்தான்" என்ற வாக்யத்தில் குமாரன் என்ற பதத்தின்

பொருளே வந்தான் என்ற சொல்லுடன் இணைகிறது, "ராஜ" என்பதற்கு முக்கியத்துவமில்லை. இவை இரண்டும் **उत्तरपदार्थ-प्रधान** (பின்சொல்லின் பொருள் முக்கியத்துவம் பெற்ற) **समास**ங்களாகும்.

## पूर्वपदार्थप्रधानः अव्ययीभावः அவ்யயீபாவம்

(1) இவ்வகை ஸமாஸத்தில் சேரும் இரண்டு பதங்களுக்குள் முன்பதத்தின் பொருள் முக்கியத்துவம் பெறும். அதாவது வாக்யத்தின் மற்ற பதத்துடன் சேர அதிக உரிமை பெறும். (2) பெரும்பாலும் இவை அவ்யயமாக (Adverb) இருக்கும். அதனால் இதற்கு இப்பெயர் வந்துள்ளது.

अहं प्रतिदिनं पाठान् पठामि। (தினம் தோறும்)

मया मध्येमार्गं रमेशः दृष्टः। (நடு வழியே)

पक्षिणः आकाशे यथेष्टं/यथेच्छं डयन्ते। (இஷ்டப்படி, விருப்பப்படி)

सः आसन्ध्यं कार्यालये कर्म करोति। (மாலை வரை)

त्वं प्रत्यक्षं किमपि वदसि, परोक्षं किमपि चेष्टसे। (கண் எதிரில், கண் மறைவில்)

இனி இவைகளின் விக்ரஹ வாக்கியங்களையும் மாறுதல்களையும் ஸமஸ்தபதங்களையும் கவனிப்போம்.

| விக்ரஹவாக்யம் | பொருள் | ஏற்படும் மாறுதல் | ஸமஸ்தபதம் |
|---|---|---|---|
| दिने दिने | தினம் தினம் | दिन प्रति/अनु | प्रतिदिनं अनुदिनं |
| मार्गस्य मध्ये | நடுவே | मार्ग मध्ये | मध्ये मार्गं |
| इष्टं अनतिक्रम्य, | மீறாமல் | इष्टं यथा | यथेष्टं |
| इच्छां अनतिक्रम्य | மீறாமல் | इच्छां यथा | यथेच्छं |
| सन्ध्यां अभिव्याप्य | உள்ளடக்கி | सन्ध्यां आ | आसन्ध्यं |
| अक्ष्णोः आभिमुख्ये | எதிராக | अक्षि प्रति | प्रत्यक्षम् |

குறிப்பு । 1. இந்த ஸமாஸத்தில் விக்கிரஹ வாக்கியங்களில் காணப்படும் இரண்டாவது பதத்துக்குப் பதிலாக ஒரு அவ்யயப் பகுதி தோன்றுகிறது. அது ஸமாஸத்தின் முதல் பகுதியாக இடம் பெறுகிறது. அதன் பொருளே வாக்யத்தின் மேல் பதங்களுடன் நெருங்கிய சம்பந்தம் பெறுகிறது. எனவே **पूर्वपदार्थ प्रधान समासः** ஆகிறது. 2. பொதுவாக ஸமாஸங்களில் வரும் பதங்களே விக்ரஹ வாக்யத்திலும் அமைந்திருக்கும். விக்ரஹ வாக்யத்தில் வரும் பதங்களே ஸமாஸங்களிலும் காணப்படும். இங்கு அப்படி இல்லை. ஆகையால் இந்த ஸமாஸத்தை **अ-स्वपद-विग्रह समासः** என்பர். உரிய பதத்தை விக்ரஹ வாக்யத்தில் கொள்ளாதது என்று பொருள்.

மேலும் சில அவ்யயீபாவ ஸமாஸ உதாரணங்களைக் கற்போம்.

1 दिशयोः मध्ये (திசைகளுக்கு இடையே)
दिशा + अप    अपदिशं

2 कृष्णस्य समीपे (கிருஷ்ணனுக்கு அருகில்)
कृष्ण + उप    उपकृष्णं

3 आयस्य योग्यं (வரவுக்கு தக்கபடி)
आय + अनु    अन्वायं

4 अर्थं अनतिक्रम्य (பொருளுக்கு முரண்படாமல்)
अर्थ + यथा    यथार्थं

5 ज्येष्ठस्य आनुपूर्व्येण (முதியவர் வரிசையாக)
ज्येष्ठ + अनु    अनुज्येष्ठं

6 तृणमप्यपरित्यज्य (புல்லையும் விடாமல்)
तृण + स    सतृणं

7 गंगायाः पारे (கங்கையின் அக்கரையில்)
गंगा + पारे    पारेगङ्गं

8 मणेः सदृशं (மணி என்பவரைப்போல்)
मणि + स    समणि

9 यावन्तः पुरुषाः तावन्तः (எவ்வளவு மனிதர்களோ அவ்வளவு
पुरुष + यावत्    यावत्पुरुषं

10 अक्ष्णः योग्यं (பார்வைக்கு எட்டக் கூடியபடி)
अक्षि + सं    समक्षम्

11 अक्ष्णः आभिमुख्ये (கண்ணுக்கு எதிரில்)
अक्षि+प्रति प्रत्यक्षं
12 अक्ष्णः अविषये/परं (கண்ணுக்கு அப்பால்)
अक्षि+पर परोक्षं
13 अक्ष्णः पश्चात् (கண்ணுக்குப் பின்னால்)
अक्षि+अनु अन्वक्षं
14 देवालयं यावत् (கோயில் வரை)
देवालय+आ आदेवालयं
15 परितोषं अभिव्याप्य (சந்தோஷம் வரும் வரை)
परितोष+आ आपरितोषं

பயிற்சி—1. தமிழில் மொழி பெயர்க்கவும்.

1 प्राची दक्षिणा प्रतीची उदीची इति चतस्रः दिशः। (दिशयोर्मध्ये) अपदिशं, विदिशः चतस्रः। अधः ऊर्ध्वं च द्वे दिशौ। आहत्य दशसु दिशासु रथं चालयितुं समर्थः दशरथो महाराजः।

2 उपकृष्णं या तिष्ठति सैव राधा।

3 पुत्रक! अन्वायं ते व्ययो भवतु। अन्यथा क्लिश्येः।

4 वानर! त्वं वैश्रवणस्य दूतः, यमस्य वरुणस्य वा दूतोऽसि, यथार्थं कथय, इति राक्षसाः हनुमन्तमपृच्छन्।

5 अनुज्येष्ठं पदव्युन्नतिं केचिदपेक्षन्ते। अन्वार्हन्ति पदोन्नतिं अन्ये मन्यन्ते।

6 बुभुक्षितः छागः सकाण्डं पल्लवं भक्षयति।

7 हृषीकेशो पारेगङ्गं गीताभवनं वर्तते।

8 गायकेषु केचित् समणि गायन्ति।

9 बालिकाः गोपिकागीतं यावच्छ्लोकं रागैः गायन्ति।

10 शंकरः गौर्याः समक्षं मन्मथं अदहत्।

11 "प्रत्यक्षे गुरवः स्तुत्याः परोक्षे मित्रबान्धवाः। कर्मान्ते दासभृत्याश्च न कदाचन पुत्रकाः।" इति काचित् नीतिः।

आहत्य ஆக. क्लिश्येः கஷ்டப்படுவாய். चालयितुं ஓட்ட. पदव्युन्नतिः உத்தியோக உயர்வு. अन्वार्हन्ति (आर्हन्ती தகுதி. आर्हन्तीं अनुसृत्य) தகுதிக்குத் தக்கபடி

“ வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது ” —திருக்குறள்



R. N. 30478/77—SAMSKRITA SRI—22-12-80
TN/TR/53 Dt. 1-10-80 S. S. P. TRICHY.



Printed by S. Naganathan, at Theni Printers, Trichy, Edited by Vaidya S. V. Radhakrishna Sastri and Published by A. Kuppuswamy, B. A., B. T., on behalf of the Samskrit Education Society, (Regd.) Trichy Branch : 9, Single Mall Street, Tiruchirapalli-620 002.